265

Reg. No. M. 2997. தனிப்பிரதி அணா 1.

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

# VITTAGAM

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT.
JAFFNA
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமைதோறும் வெளிவருவது

Bureau de la Direction:—
RUE D'AMBALATADOU AYER
MADAM NO. 4, Pondichery.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. குறள்.

காரியாலயம்:—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெ. 4, புதுவை.

VOL. I. { புதுவை, பவ—ஸ்ரீ ஆடி—மீ சஉ (19—7—34) } No. 34.

## திருமந்திரம்

நின்ற வினையும் பிணியு நெடுஞ்சேய
யன்றேயழி லற்றச் சுத்தம தாகவும்
பின்றைங் கருமமும் பேர்த்தரு ணேர்பெற்றுத்
துன்ற வழுத்தலு ஞானிக டேய்மையே.

உண்மை யுணர்ந்துற வோன்சித்தி முத்தியாம்
பெண்மயற் கெட்டறப் பேறட்ட சித்தியாந்
திண்மையின் ஞானி சிவகாயங் கைவிட்டால்
வண்மை யருடா னடைந்தன்பி லாறுமே.

அருள்பெற்ற காரண மென்கோ லமரி
லிருளற்ற சிந்தை யிறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே.

சினஞ்சென்ற நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல் லார்க்குப்
பனஞ்செய்த வாணுதற் பாகனு மங்கே
யினஞ்செய்த மாலின்போ விணங்கிநின் றானே.

வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற்று
வொத்துப் புலனுயி ரொன்று யுடம்போடு
செத்திட் டிருப்பர் சிவயோகி தானே.

வித்தினி லன்றி முளையில்லை யம்முளை
வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை
வித்து முளையு முடனல்ல வேறில்லை
யத்தன்மை யாகு மரனெறி காணுமே.

உ

திருவருள் துணை




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.

(திருவாசகம்)

# வித்தகம்

புதுவை,

பவ-ஸூ ஆடி-மீ 4உ

## பணிசெய்து கிடத்தல்

### அப்பர் தேவாரம்

நங்கடம்பனைப்பெற்றவள்பங்கினன்
தென்கடம்பைத்திருக்கரக்கோயி
[லான்
தன்கடனடியேனையுந்தாங்குதல்
என்கடன்பணிசெய்துகிடப்பதே.

"என் கடன் பணிசெய்து கிடப்பதே." என்னும் மறை மொழியின் பொருள் யாது? பணிசெய்து கிடத்தல் என்றால் என்னை? எனின், அதுவே இச்சிறிய கட்டுரையில் ஒரு சிறிது கூறுவான் எடுத்துக்கொண்ட பொருளாகும்.

ஒருவன் எவ்வெச் சென்மத்தில் எவ்வெவ் வினையை விளைத்தனனோ அவ்வவ் வினையின் பயனான முன்னிலையேயன்றி வேறுமுன்னிலை இல்லை என்னும் வேத உண்மையை வாய்மையாக உணர்ந்து அம் முன்னிலைகளால் நிகழும் நன்மைதீமைகளாகியகோரணிகளில் ஈடுபட்டு அவச்சலனமடைந்து மேல் வினைகளை ஆக்கமுறச் செய்யாது வாளாங்கு வதிந்து (சும்மா இருந்து) மதி வைராக்கியத்தோடு குரு உரை வழுவாது ஆவன செய்து கிடத்தலே "பணிசெய்து கிடத்தல்" என்பது. "சும்மா இருத்தல்" என்னும் பெரியார் மறையின் பொருளும் இதுவேயாம். இதனை எக்காலத்தும் மறவாது ஒழுகுவதே மெய்யடியார் இலக்கணம் என வேதத்தால் வரையறுக்கப்பட்டது.

வினைரூபங்களாகிய முன்னிலைக் கோரணிகளில் ஈடுபட்டு அவச்சலனம் அடைவதையே "விளையாட்டு" எனவும், அதனை அறவே ஒழிதல் வேண்டும் எனவும், அதுவே மெய்த்தொண்டர் இலக்கணம் எனவும் வற்புறுத்தி யருளியது மணிவாசக சிவம்.

### திருவாசகம்

அடியா ரானீ ரெல்லீரு மகல விடுமின்
விளையாட்டைக்
கடிசே ரடியேவந் தடைந்து கடைக்கொண்
டிருமின் திருக்குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச் சிவலோ
கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூவார் கழற்கே புகவிடுமே.

(ஷ யாத்திரைப் பத்து, செ. 4.)

"அடியாரானீர் எல்லீரும் அகலவிடுமின் விளையாட்டை" என்பதனால்பணி செய்து கிடத்தலையே கடனாக் கொள்ளாது முன்னிலைக் கோரணிகளில் ஈடுபட்டு அவச்சலனமடைந்து பராக்குறுதலாகிய "விளையாட்டு" அறவே ஒழிய வேண்டியது எனவும் அதுவேமெய்த்தொண்டர்க்குரிய முக்கிய இலக்கணம் எனவும் வரையறுக்கப்பட்டமைகண்டு கொள்க. இவ்வாறு பணிசெய்து கிடத்தலால் ஆம் பயன் தற்சுதந்திரம் ஒழிதலேயாகும். அதுவே "கடிசேர் அடியே வந்தடைந்து" என்பதனால் குறிக்கப்பட்டது. "சேவடி சேர்தல் செயலறல் தானே." என்பது திருமந்திரம் (7ம் தந். குருபூசை செ. 3.) செயலற்று நின்று யாவற்றையும் திருவருட் செயலாகக் காணவேண்டும் என்பார் "கடைக் கொண்டிருமின் திருக்குறிப்பை" என்றார். இவற்றால் ஆம் பயன் என்னை? எனின், அது தான் செடியாராக்கையாகிய மருளுடம்பு ஒழிந்து, அஃதாவது இருவினை சமப்படுதலால், பிராரத்த தநுவாகிய மலதநுவானது விமல தநுவாக மாற்றமடையப் பெற்றுச் சிவலோக வாழ்வு கைகூடப் பெறுதலேயாகும். இவ்வுண்மையே "செடிசே ருடலைச் செல நீக்கிச் சிவலோகத்தே நமைவைப்பான்" என்பதனால் வற்புறுத்தப்பட்டது. "செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை" எனத் திருவாய்மொழி கூறியதும் அறிக.

உபநிடதங்களில், இச் சரீரம் பிராரத்த கர்மத்தால் ஆயது என்றும் பிராரத்தம் ஒழிந்தால்—அழிந்தால் அதனாலாய மருளுடம்பாகிய தூலமும் ஒழிந்துவிடும் என்றும் மெய்யடியார்களாகிய இருடிகள் கூறுகின்றார்கள். அக் கூற்றுக்களுக்கு, தூலபுத்தியுடையோர் தம் மனம் போனவாறு பொருள்கண்டு அவ்இருடிகள் கூற்றுக்களின் உட்பொருட்கு முரணாகப் பேசிப் புலம்பித்திரிவர். இருவினை சமம்பெற்றஞான்று பிராரத்த தேகமாகிய இவ் அசுத்த தநு இல்லையாகும் என்பதனை அஃதாவது இம் மல தநு விமல தநுவாக மாற்றமடைந்துவிடும் என்பதனை இவர் அறியார். இருவினையும் சமப்படுதலே—கெட்டுத் திரிதலே "மாற்றிப் பிறத்தல்" என்னும் துவிசத்துவமாகும். இப்பெற்றி கைகூடப் பெற்ற மெய்யடியார்க்கு இம்மாயா உலகம் சிவலோகமாகும். தன்னிலை திரியவே முன்னிலையும் திரியும். இயற்கை முறை இதுவே.

"செடிசேருடலைச் செலநீக்கிச் சிவலோகத்தே நமை வைப்பான்'' என்பதன் உட்பொருள் இதுவே என அறிக.

உண்மையே இன்னது என அறியும் ஆற்றலும் காதலும் இல்லாதார் அவ் உண்மையாகிய சத்தியத்தையே சவரூபமாகக்கொண்டு விளங்கும் வேதாகம புராண இதிகாசங்களின் அருமை பெருமையை அறிய வல்லராவரோ? இம் மருளுடம்பு முறையே விமலமாய் அமலமாய்—ஊனம் அறவே ஒழிந்து பிரணவ சரீரமாய் (ஓ வடிவம்) அருளாய் சிதாகாசப் பெருவெளியில் மறையும் என்பதனை அறியாதவரே "இவ் அசுத்த தநுவுடன் எவ்வாறு மறையலாம்?—மறைந்து முத்தியடையலாம்?'' எனக் கருதி இடர்ப்படுகின்றனர்.

திருவடி சேரப்பெற்றோர் செடியார் ஆக்கை கெடுதலை—கெட்டுத் திரிதலைபின்வரும் பிரமாணமும் நன்கு வற்புறுத்துதல் கண்டு கொள்க.

## திருமந்திரம்

கழலார் கமலத் திருவடி யென்னு
நிழல்சேரப் பெற்றேனெடுமோ லறியா
வழல்சேரு மங்கியு ளாதிப் பிரானுங்
குழல்சேரு மின்னுயிர்க் கூடெங் குலைந்ததே.
(6ம் தந். 2வது திருவடிப்பேறு. செ. 11.)

"இன்னுயிர்க் கூடெங்குலைந்ததே'' என்பது செடியாராக்கை ஒழிதலை—மாற்றமடைதலைக் குறித்து நின்றது. "கள்ளப் புலக்குரம்பைக் கட்டறுக்க வல்லானே'' (திருவாசகம், சிவபுராணம்) என மணிவாசகர் அருளியதும் அறிக. ஆதலால் திருவடிக்கே யாவரும் சிந்தையைச் செலுத்தவேண்டும் என்பார்"பூவார் கழற்கே புகவிடுமே'' என்றார். பின் வரும் பிரமாணமும் திருவடிப்பேற்றின் மாண்பை நன்கு புலப்படுத்துகின்றது.

## திருமந்திரம்

திருவடி யேசிவ மாவது தேரிற்
திருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற்
திருவடி யேசெல் கதியது செப்பிற்
றிருவடியே தஞ்ச முட்டெளி வார்க்கே.
(ஷை 1ம் தந். 1வது உபதேசம், செ. 26.)

மெய்யடியாரெல்லாம் குருநெறி கடைப்பிடித்துச் சத்துவத்தில் ரஜோகுணத்தலைமை பூண்டு புதுவினை என்னும் மதிவினை புரிந்து அஃதாவது முன்னிலை ஆசான் உரைவழி நின்று வழுவற ஒழுகி அதனால் எடுத்தசென்மத்தில் அநுபவத்துக்கு வந்ததும் பல சென்மங்களுக்கு வித்தாய் இருப்பதுமான பழவினை என்னும் விதிவினையை வென்று உய்தியடைந்தவரே யாவர். வாய்மையான முயற்சி என்பதும் இதுவே என அறிக.

மெய்யடியார் புதுவினையால் பழவினையை வெல்லும் திறனைப் பின் வரும் பிரமாணங்கள் நன்கு புலப்படுத்துகின்றன.

## திருமந்திரம்

முன்னை வினைவரின் முன்னுண்டே [நீங்குவர்
பின்னை வினைக்காணார் பேர்ந்தறப் [பார்ப்பர்க
டன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிக
ணன்மையி லைம்புல னடலி னாலே.

[முன்னைவினை=பிராரத்த வினை. பின்னைவினை=ஆகாமிய வினை. முன்னை வினைப்பயனாகிய முன்னிலைக் கோரணிகளில் ஈடுபட்டு அவச்சலனமடைந்து மேல்வினையை ஆக்கமுறச் செய்வதே ஆகாமியம் என்பது. பஞ்சேந்திரிய வினையே சீவன் என அறிவதே தன்னைத்தான் அறிதல் என்பது. "நன்மையின் ஐம்புலன் நாடல்'' என்பது ஐம்புலனும் நிறைமுறையோடு தழுவப்படுதலை உணர்த்திற்று.]

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகண்
முன்னை வினையின் முடிச்சை யவிப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே.

[சென்னியில் வைத்த சிவனருள்=மதிவினையாகிய புதுவினை என்னும் திருவருணாட்டம். "சேயமாமலர்ச் சேவடிக்கணம் சென்னி மன்னித் திகழுமே.'' என மணிவாசகர் அருளியதும் அறிக. (திருவாசகம், சென்னிப் பத்து, செ. 5.)]

மன வாக்குக் காயத்தால் வல்வினை மூளு
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னு
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னாற்
றனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே.
(ஷை 8ம் தந். ஞானி செயல் செ, 1,2, 3.)

உலகத்தில் தம் எண்ணப்படியே பிறர் ஒழுக வேண்டுமெனக் காரணங் கற்பித்துக்கொண்டு ஓவாது முயலும் சீவான்மாக்களே யாண்டும் மலிந்துள்ளார்கள் என்பது கண் கூடு. இதுதான் சீவம் இயலுக்கு ஐ=சீவஇயற்கை. இப்பெற்றி இல்லாவிடின் முன்னிலையே இல்லை. முன்னிலைகளைப் பொருட்படுத்தி அவச்சலன மடைதலாற்றான் அளவிறந்த அநர்த்தங்கள் உளவாகின்றன. ஆதலால் துன்பம் நீங்கி இன்புற முயல்பவன்—கட்டுக்கள் அற்று வீடு பெற முயன்று படியேற்றம் பெறுபவன் திருவருணாட்டம் வழுவற வகித்துப் பணிசெய்து கிடக்கவேண்டும். முன்னிலைக் கோரணிகளுக்குத்தப்பிப் பிழைப்பதென்றால் எளிதன்று. மாயை வலையில் அகப்படாது தப்பிப் பிழைப்பதென்றால் எளிதன்று. மாயை வலையில் அகப்படாது தப்பிப் பிழைக்க ஒருவன் முயன்றுழி, அம் மாயா தேவி வாளா கிடப்பளோ? அவளால் அடையும் கஷ்டம் சிறிதாமோ?

## திருவாசகம்.

"..............................
தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானா ரயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியருஞ்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்த மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
..............................''

(ஷை போற்றித் திருவகவல்)

என்பன முதலாக மணிவாசகர் அருளிய அநுபவத் திருவாக்குக்களை நோக்குக.

“கோடையிடி முழங்குமப்பா கண்ணை மூடு” என்றனர் கருவூர்ச் சித்தர். “கோடை யிடி” என்பதனால் முன்னிலையாகிய — தென்புலத்தாராகிய யமபடர்கள் காரணங் கற்பித்துக்கொண்டு துன்புறுத்தி நிற்றலும் பயனின்மையும் நன்கு புலப்படும். முன்னிலைக் கோரணிகளுக்குக்கண்ணை மூடாது விழித்திருப்பதால்—இவற்றைப் பொருட் படுத்துவதால் பணி செய்து கிடத்தல் இழுக்குறும். ஆதலால் “கண்ணை மூடு” என்றார்

“விழித்திருந்து உள்ளக் கருத்தினை இழந்தேன்” என மணிவாசகர் அருளியதும் அறிக. (திருவாசகம். செத்திலாப் பத்து செ. 1.) “இமைத்து நிற்பது சால அரியதே” என்றனர் அப்பர் (சித்தத் தொகை; திருக்குறுந் தொகை செ. 22.) இவற்றால் முன்னிலைக் கோரணிக்குக் கண்ணை மூடி நின்று பணிசெய்து கிடத்தலின் அருமை நன்கு புலப்படும். ஆயினும்,

“ ..........................
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்
தாடியு மலறியும் பாடியும் பரவியுங்
கொடிறும் பேதையுங் கொண்டது விடா
[தெனும்
படியே யாகிநல் லிடையறு அன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய்
[விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்று மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலு நினையா
தருபரத் தொருவ னவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணை
[யைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
....................................”

(ஷை-போற்றித் திருவகவல் அடி 59–87.)

என மணிவாசக வள்ளல் அருளியாங்கு குருபத்தி நனி சிறந்து அவனையே சிவம் என வழிபட்டு, அவனுரை வழுவாது மதிவைராக்கியத்தோடு பணிசெய்து கிடக்கும் மெய்யடியார்க்கு யாதோர் ஆபத்தும் நேராதவாறு அன்னவரை அவ் இறைவன் தாங்கி அமலவினை வேறச் செய்வது (வளர்ப்பது) உண்மையிலும் உண்மையேயாகும்.

ஆதலால் . எவ்வகைத் துன்பம் நேரினும் மனம் பராக்குறாது திருக்குறிப்பைக் கடைப்பிடித்துப் பணி செய்து கிடத்தல் வேண்டும். இவ்வாறு ஒழுகியும் பயனில்லை போலும் என உள்ளம் தளர்வது மா இழுக்கு. உள்ளம் தளர்வதால் உளவாகும் ஏதப்பாடு பலவாகும்.

“உழப்பின் வாரா உறுதிகள் உளவோ
கழப்பின் வாராக் கையற வுளவோ”

என்றனர் பட்டினத்தடிகள். உழப்பு =முயற்சி. கழப்பு=கழலுதல், பின் வாங்குதல், சோம்புதல். கையறவு= துன்பம். பின் வரும் பிரமாணமும் இவ்வுண்மையை நன்குபுலப்படுத்தும்.

குறள்

அருமையுடைத்தென்றசாவாமைவேண்டும்
பெருமை முயற்சி தரும்
(ஷை 62–ம் அதி — ஆள்வினையுடைமை
செ. 1.]

அடைதற்கரியது என்று சோம்பியிராமையே வேண்டற்பாற்று. அவ்வாறு சோம்பாது முயன்றால் அம் முயற்சியே பெருமையை அளிக்கும் என்பது இதன் பொருளாகும். பெருமை அம் முயற்சியின் பயனை உணர்த்தி நின்றது. முயற்சி என்பதன் உண்மைப் பொருளும் அதனால் ஆம் பயனும் “வித்தகம்” இல. 23–ல் விளக்கிக் கூறப்பட்டன. ஆங்குக் காண்க.

ஒவ்வொரு செயலுக்கும் — பயில்வுக்கும் அவ்வக்காலத்திலேயே பயன் வருதல் முடியாத காரியம். ஒவ்வொரு செயலும் செய்யும் போது வித்தெனவே அமையும். மஞ்சல் முளை ஆக்கமுற்றுப் பயனளிப்பதும் கால அளவின்பாற்பட்ட தென்பது அறிஞரால் மறுக்க முடியாததே. வித்தாயிருந்தது காலமுறைப்படி விளைவேறிப் பயன் அளிப்பதென்பது பட்டாங்கின் உட்கிடக்கையும் வேதத்தின் உண்மையும் ஆம். இதனை அறியாதார் தமது செயல்களுக் கெல்லாம் தாம் நினைத்த போதே—நினைத்தவாறே பயன் வரவில்லையே என உள்ளம் தளர்ந்து இழுக்குறுவர். விளைத்தவை அனைத்தும் காலத்தோடு பயன் அளிக்கும் என்பதும் உண்மையே. விளைத்தவனே அதன் பயனை அளிக்க உரியனுவனன்றி— அவனே அதன் பயனை வா என்று அழைத்து ஊட்ட வல்லனுவனன்றி வேறு வழி இல்லை என்பதும் உண்மையே. விளைவேறாது கிடத்தல் என்பதும் இல்லை, விளைந்து பக்குவம் அடைந்ததை ஊட்டாமலும் உண்ணாமலும் இருத்தல் என்பதும் இல்லை. விளைத்துக் காத்தது வீண் போகுமா? போகாது; பயன் தராமல் போகாது. பூவோ காயோ எனின், பூவுமன்று; காயுமன்று;முதிர்ந்து பக்குவமடைந்து பழுத்தது. சாதலுறச் சாதலுறத் தண்டித்தபின் “ஆஞ்சேல்!” என அபயாஸ்தம் அளிப்பதல்லால் அதன் முன் ஒன்றும் ஆவதில்லை. “நாடொறும் நல்குவானலன்” (அப்பர் தேவாரம், நமச்சிவாயப் பதிகம் செ. 6.) என்றார் நமது அப்பர். பணிசெய்து கிடத்தலின் பயன் இதுவே என

அறிக. புதுவினையால் பழவினையாகிய கர்மங்களை ஒழிக்கச் செய்து மெய்யடியாரை ஆட்கொள்ளும் இறைவன் மாண்பும் இதுவே என அறிதல் வேண்டும். உடையவன் அளித்தல், அதனை அங்கையிற் பெறுதல், அதன் பின் உண்ணல் என்னும் மூன்று நிகழ்ச்சிகளும் ஒன்றே. பெறுவதும் உண்பதும் என விவகாரத்தில் இரண்டெனப் பேசப்படினும் பெற்ற போதே உண்டதென்பது பெற்றும். பெறுவதென்பது ஒன்று உண்டோ எனின், எண் பூர்த்தியடைந்ததே—பயில்வு பூரணப்பட்டதே பெற்றது என்பதாம். அளிக்காமல் பெறுவதில்லையாதலால் விவகரித்தற் பொருட்டு இரண்டாகக் கொள்ளப் பட்டன என்பது வெள்ளிடை. இப் பயில்வுகள் தாம் ஆகமங்கள்—வாய்மையான ஆகமங்கள் — எண்கள் எனப்படும்.

வீடு பேறடைய முயல்வான் ஒருவன் "உற்ற ஆக்கையின் உறு பொருள்" ஆகிய ஆசானை விளைவேற்றி தரிசனம் செய்வதற்கு, முன்னிலையில் குருவடியாய்ப் போந்த ஆசான் அருளியவாறு சூக்கும நிறையுடைய பல பயில்வுகளைப் பயிலுதல் வேண்டும். இப் பயில்வுகளுக்கு இத்தனை என எண் உண்டு. அவ் எண் பூர்த்தியானல் அணுவாயிருக்கும்ஆசானாகிய வித்து விளைவேற்றப் பட்டுச் சித்தாயிருந்தது அசித்தாய்த் தோய்ந்து முன்னிலைப்படும் என்பது வேத உண்மை. இவ் உண்மையையே,

"ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள் வாழ்க" (திருவாசகம், சிவ புராணம்) என்னும் மறைமொழியால் நன்கு புலப்படுத்தி யருளியது மணிவாசக சிவம் என அறிதற்பாற்று. ஈண்டு ஆகமம் என்பது உலகில் வழங்கும் நூல்களைக் குறித்ததன்று. இப் பயில்வுகளின் எண்களாகிய ஆகமங்கள் சீவர்கள் சடபேதம் கர்மபேதம் என்பனவற்றிற்கு ஏற்ப அளவுபடாதன என்பது பின்வரும் திருமூலர் திருவாக்காலும் நன்கு புலப்படும்.

## திருமந்திரம்

அண்ண லருளா லருளுந்திவ் யாகமம்
விண்ணி லமரர் தமக்கும் விளங்கரி
தெண்ணி லெழுபது கோடிநூ றாயிர
மெண்ணிலு நீர்மே லெழுத்தது வாமே.

(ஷை—ஆகமச் சிறப்பு செ 4)

மேலும் விரிப்பிற் பெருகும்.

பணிசெய்து கிடத்தலையே கடனாகக் கொண்ட மெய்யடியார் எத்துணைக் கஷ்டங்களை அடையினும் அவர்க்கு ஆபத்து நேரமாட்டாது என்பது வேத உண்மை. ஆபத்து நேர்ந்து மாண்டுபோகாது அவரைத்தாங்குதல் அவரை ஆட்கொண்ட இறைவன் கடனாகும் என்பது கரந்தூக்கி முக்காலும் மொழிந்த சத்தியம். இது பற்றியே,

"..................திருக்கரக்கோயிலான்
தன் கடன் அடியேனையுந் தாங்குதல்."

என்று அருளினர் அப்பர். பின் வரும் திருஞான சம்பந்தர் தேவாரமும் மெய்யடியார்க்கு ஆபத்து நேராது என்பதனையும் அவரைத் தாங்குதல் இறைவன் கடன் என்பதனையும் நன்கு வற்புறுத்துதல் கண்டு கொள்க.

## திருஞான சம்பந்தர்.

பிணியுமிலர் கேடுமிலர் தோற்ற
மிலரென்றுலகு பேணிப்
பணியுமடியார்களன பரவ
மற இன்னருள் பயந்து
துணியுடைய தோலுமுடை
கோவணமு நாகமுடல் தொங்க
அணியுமழகாகவுடை யானுறைவதவ
ளிவணல்லூரே.

(ஷை—திரு அவளிவணல்லூர்—திருவிராகம்,
[பண் சாதாரி செ. 4.)

அப்பர் பெருமானுக்கு மிகப் பெரிய கஷ்டங்கள் நேர்ந்தும் அவர் அவற்றால் சாதலடையாது நித்தியத்துவம் பெற்றமையே பணிசெய்து கிடந்த மெய்யடியாராகிய அவரை இறைவன் தாங்கியமைக்கு உறு சான்றாயிற்றல்லவா? ஏனைய மெய்யடியார் நிலைமையும் அன்ன நீர்மையதே என்பது சொல்லாமலே அமையும். பின் வரும் தேவர் திருவாக்கும் இவ் வுண்மையைப் பசுமரத்தாணிபோல் நன்கு வலியுறுத்துதல் கண்டு கொள்க.

## குறள்

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

(ஷை 25ம். அதி. அருளுடைமை செ. 5.)

(இ—ள்) அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை—அருளைத் தமக்கு உரியதாகப் பெற்ற மெய்யடியார்க்குத் துன்பத்துள் துன்பமாகிய சாக்காடு உளதாகாது; வளி வழங்கு மல்லல் மாஞாலம் கரி—காற்று வழக்கம் அறாத வளப்பமுடைய இப் பெரிய அண்டத்துள்ளாரே இதற்குச் சான்றுவர் என்பது.

"அல்லல்" துன்பத்துள் துன்பமாகிய சாக்காட்டை உணர்த்திற்று; "சாதலின் இன்னாதது இல்லை." என்றனர் தேவராதலின் "அல்லவைதேய அறம் பெருகும்" என்புழிப்போல ஈண்டு அல்லல் என்பது இன்மை பயக்கும் மறம் என்னும் பொருட்டாய்ச் சாக்காட்டை உணர்த்தி நின்றது எனினும் ஆம். அறம் நித்தியம். வளி வழக்கு இல்லாத இடம் இல்லையாதலின், அருளாளராகிய மெய்யடியார் பிணி மூப்புச்சாக்காடுகள் இன்றி நித்தியத்துவம் அடைதல் உலகப் பிரசித்தியான உண்மை என்பதுபோதர "வளி வழங்குமல்லன் மாஞாலங்கரி" என வற்புறுத்துக் கூறினர் தேவர்.

வாய்மையாகப் பணிசெய்து கிடக்கும் மெய்யடியார்க்குத் துன்பத்துள் துன்பமாகிய சாக்காடு என்னும் அல்லல் நேருமா ? நேராது! இது வேத உண்மை. இதனை அறியாதார் அறுபத்து மூவருள்ளே சிலர் சரீரம் ஆயுதங்களால் பின்னமடைய அவர் இறந்து விட்டனரெனவும் ஆதலால் செத்துப்போவதும் முத்திதான் என

வும் சாட்டுக்கள் கூறி அமைவர். இவ்வாறு கூறுவோர் தமது துணிபுக்குச் சேக்கிழார் பெரிய புராணத்தைச் சான்று காட்டி விடுகின்றனர்.

அதிகார புருடரும் கவிராஜரும் சிவநேசருமாகிய சேக்கிழார் பெருமான் மெய்யடியாரது அருமை பெருமையை அஃதாவது அவர் பணி செய்து கிடக்குங்கால் அவர்க்கு ஆபத்து நேராதவாறு — மரணம் நேராதவாறு இறைவன் அவரைத் தாங்கி இரக்ஷிப்பன் என்னும் வேத உண்மையை அறியாதவரல்லர். உண்மையை அறியாதவர் என்று கூறுதல் தகுமா? "அளவு கூட உரைப்பரிதாயினும், அளவிலாசை துரப்ப அறைகுவேன்" என்றவாறு அடியவர் ஒழுக்கங்களையும் முத்தி நிலையையும் வெள்ளிடை மலைபோலப் பூரணமாகக் கூறிவிடுவது புலவர் பெருமானாகிய அன்னவர் நோக்கமன்று. மற்றோ, பிற்காலமாகிய தற்காலத்தில் கடவுள் ஒருவர் உண்டு என்னும் கொள்கையுமே பலரால் மறுக்கப்பட்டு நாத்திகம் தாண்டவம் புரியக்கூடும் என சேக்கிழார் ஒருவாறு அறிந்து கொண்டவராதலால், தமது தலை துணிக்கப்படும் வினைவரினும் அவ் இகலுக்கு அஞ்சாது எதிர் சாய்ந்து பணிசெய்து கிடக்கும் மெய்யடியார்க்கே கடவுள் காட்சிகொடுத்து நித்தியத்துவம் அளிப்பார் என்னும் வேத உண்மையை, அடியவர் சரித்திரங்களை ஒருவாறு கூறுமுகத்தால், "கடவுளைக் காண முடியுமா? காட்ட முடியுமா?" என்று நாத்திகம் பேசி வேதாகமங்களைப் புறம் பழிக்கும் உலகமாக்களுக்கு அறிவுறுத்துவான் வேண்டிச் செழுந்தமிழ்ச் சமண காப்பியமாகிய சீவக சிந்தாமணியோடு உறழ் தந்து நின்று சோழமன்னனும் சைவப் புலவர்களும் மகிழ்ச்சியின் மைந்துற்றுப் போற்றும் வண்ணம் காவியச் சுவை சிறந்து கவின்பெற நிலவுமாறு நாடு நகர வளங்களும் திணை மயக்கங்களும் நன்று நவிற்றிச் சொல்லணி பொருளணிகளும் பத்திச் சுவையும் குதி கொண்டு ஆடும்படி சிறந்த செந்தமிழ் இலக்கியமாகப் பெரிய புராணத்தைப் பாடிவைத்தனர். இது பற்றியன்றோ! அடியவர் சிலர் இகலுக்கு அஞ்சாது எதிர் சாய்ந்து தொண்டாற்றிய விடத்து அவர் தூலம் ஆயுத முதலியவற்றால் பின்னமடையும் அவசரத்தில் எம்பெருமான் இடபாரூடராய்க் காட்சி கொடுத்தனர் (அமலப்படி அடைதல்) என்ற மட்டில் கூறியமைந்து, அப்பால் அவர் மதிவைராக்கியத்தைக் கண்ட பரமசிவம் மேல் அவ்வடியார் படியேற்றம் பெற்றுப் பூரண அமலமடைந்து மறைதற்குரிய சாதகங்களை அருளிச் செய்ய, அவர் அவற்றை வழுவறத்தாங்கி ஒழுகித் தமது அமல வடிவோடு சிதாகாசப் பெருவெளியில் மறைந்து முத்தியடைந்தனர் என்பது சொல்லாமலே அமையுமாதலால், அந்த அத்தியாயத்தை மறை பொருளாக்கி உய்த்துணர வைத்தனர் நமது புலவர் பெருமான் என அறிதல் வேண்டும். அன்றி "பொய்ம்மையாளரைப் பாடாதே" என ஆணை தந்த தம்பிரான் தோழரால் புகழ்ந்து போற்றப்பட்ட மெய்ம்மையாளராகிய அவ் அடியவர் எம்போலிய பாமரமாக்கள்போல விதியை வெல்ல முடியாது அவ் விதி என்னும் மாயை வலைப்பட்டுத் தமது மெய்யாகிய உடலைப் பொய்யாக்கிப் பொய்ம்மையாளராய் மரணமடைந்து பிறவி நெறி கண்டனர் எனச் சிவநேசராகிய சேக்கிழார் பெருமான் கூறத்துணிந்தனர் என்பது சிவாபராதமாய் அவர் தம் பெருமைக்கே இழுக்காகுமன்றி வேறு என்னை?

மெய்யடியார் சரித்திரங்களை அவர் காலத்து அவர்க்கு அணுக்கராயிருந்து அவர் ஒழுக்கங்களைப் பூரணமாய் அறிந்தோர்எவராவது எழுதிவைத்தவரல்லர். அறுபான் மும்மை நாயன்மாருட் பலர் பாடல்களை அருளிச் செய்தவராகவும் தெரியவில்லை.

ஆதலால் யாம் மேலே கூறியவாறு தமது திருவுளப் பான்மை நன்கு புலப்படும் வண்ணம், தேவாரம் பாடிய மூவர் வரலாற்றினைச் சில்பல வகையால் விரித்தும், மற்றைய அடியவர் சிலர் பலரது ஊர்ப் பெயர் தந்தை தாயர் பெயர் முதலியனவும் அவ் அவ் அடியவர்க்கு எவ்வெக் காலத்து எவ் எவ் இடத்து எவ் எவ்வாறு குருநாதன் தோன்றி எவ் எச்சாதகங்களை அருளிச் செய்தனன் என்பதும், அவ் அச்சாதகங்களை அவ் அவ் அடியவர் எவ் எவ்வாறு அநுட்டித்துப் படியேற்றம் பெற்று முத்தியடைந்தனர் என்பதும் எவ் எவ் அற்புதங்களை நிகழ்த்தினர் என்பதும் பிறவுமாக எத்தனையோ பல உண்மைகளை விளக்கமுற விரித்துக் கூறாது அவர் சரித்திரங்களை மிகச் சுருங்க உரைத்தும் காவிய நயம் சிறந்து தோன்றச் சில பல இடங்களில் நாடு நகர வளங்களை விரித்தும் உலகியல் நோக்கிப் புராணம் பாடி வைத்த சேக்கிழார் பெற்றியை ஆழ்ந்து நோக்காது மனம் போனவாறு கூறி அவர் புராணத்தைச் சான்று காட்டி அமைதல் சால்புடைத்தன்று என்க. திருக்குறிப்புத் தொண்டர் புராணம் முதலியவற்றை உற்று நோக்குவார்க்கு இவ் உண்மை தெற்றெனப் புலப்படாததாகுமா? ஆகாது. மேலும் விரிப்பிற் பெருகுமாதலின் அமைக.

இதுகாறும் கூறியவைகளால் பணிசெய்து கிடத்தல் என்பதன் இலக்கணமும், வாய்மையாகப் பணிசெய்து கிடக்கும்மெய்யடியார் யாதோர் ஆபத்தும் நேர்ந்து சாக்காடு அடையாதவாறு அவரைத் தாங்குதல் இறைவன் கடன் என்னும் வேத உண்மை எஞ்ஞான்றும் பொய்படாது என்பதும், தம்பிரான் தோழரால் புகழ்ந்து போற்றப்பட்ட மெய்ம்மையாளராகிய அடியவரெல்லாம் எவ்வாற்றானும் சாக்காடடையாது தமதுஉடலை அமலமாக்கி நித்தியத்துவம் அடைந்தவரே என்பதும், அவர் சரித்திரத்தை ஒருவாறு கூறுமுகத்தால் புராணம் பாடிய புலவர் பெருமானாகிய சேக்கிழார் திருவுளப் பான்மையும் அதுவே என்பதும் ஒருவாறு உணரத்தகும். (சுபம்.)

# பெண்பாற் புலவர்கள்

யாழ்ப்பாணம் வேலணையூர்,

**பண்டிதர் திரு கா. பொ. இரத்தினம்.**

அவர்கள் எழுதியது



( 33-ம் வாரத்தொடர்ச்சி )

### பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு.

இம் மெல்லியலாருடைய செய்யுளால் இவரது கற்பின் திறனும் நல்லிசைப் புலமையும் நன்கு விளங்கக் கிடக்கின்றன. முற்காலத் தமிழ்ப் பெண்கள் சிலர் தம் கணவர் இறந்தவுடன் எரிபுகுந்தனர் என்பதும்,சிலர் நீர்ச் சோற்றுத் திரளுடன் வேளையிலைக் கறியையும் உண்டு பருக்கைக் கற்கள் பரப்பிய படுக்கையில் பாயின்றிக் கிடந்து கைம்மை நோன்பு நோற்றனர் என்பதும் இச் செய்யுளால் அறியக்கிடக்கிறது.

இதனை,

“காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர் ஈயா ராயின்,
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்
நளியெரி புகாராயின் அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடன் படுவர்”

எனும் மணிமேகலை அடிகளானும் அறிந்து கொள்ளலாம்.

### சங்க கால ஔவையார்

அருந்தமிழ்த் தாயின் பெருந்தவப் பேறாய் அவதரித்த ஔவையார்கள் இருவர் எனவும் அவர்களுள் ஒருவர் சங்ககாலத்தவர் எனவும் மற்றவர் கம்பர் காலத்தவர், எனவும் கொள்ளலே ஏற்புடையது. அறிஞர் சிலர் சங்க கால ஔவையாரே அதிகமான் அளித்த நெல்லிக் கனியை யுண்டமையால் இறவாது கம்பர் காலத்தும் இருந்தார் எனக் கருதுகின்றனர். அங்ஙனமாயின் அவர் இடைக்காலத்தில் எங்கிருந்தார்? இப்பொழுது எங்கிருக்கின்றார்? எனும் வினாக்களுக்கு விடையிறுக்க வொண்ணாதாகையால் அஃது பொருத்தமுடைய தொன்றன்று. இன்னுஞ் சிலர் சங்க கால ஔவையாரே ஆத்திசூடி, நல்வழி, மூதுரை முதலியவற்றை இயற்றியவர் என்பர். இதுவும் ஏற்புடைய தொன்றன்று. என்னை? இவற்றின் சொற்களின் பிரயோகங்களும் நடையின் போக்கும் வேறுபட்டிருத்தலினாலும், கடைச்சங்க காலத்து நூல்களை வரையறுத்துக் கூறும் வெண்பாக்கள் இவற்றைப்பற்றிக் கூறாமையாலும் என்க.

சங்க கால ஔவையாருடைய குலமும் ஊரும் இன்னின்ன வெனத் தெளிந்து கூறமுடியாதிருக்கிறது. சில்ர் ஞானமிர்தம் எனும் நூலினுள் காணப்படும்.

“யாளி கூவற் றாண்டுமாதப் புலைச்சி
காதற் சாணி யாகி மேதினி
இன்னிசை யெழுவர்ப் பயந்தானீண்டே”

எனுமடிகளையும்இவற்றினுரையையும்,

“கபில ரதிகமான் காற்குறவர் பாவை
முகிலனைய கூந்தன் முறுவை—திகரிலா
வள்ளுவ ரவ்வை வயலூற்றுக் காட்டி [லுப்பை
எண்ணில் எழுவர் இவர்”

எனும் வெண்பாவையும் ‘கபிலரகவல்’ எனும் செய்யுளையும் பிறகர்ண பரம்பரைக் கதைகளையும் ஆதாரமாகக் கொண்டு இவரின் தந்தை யாளிதத்தன் எனும் அந்தணன் எனவும் தாய் ஆதப்புலைச்சி எனவும், கபிலர், அதிகமான், வள்ளி, முறுவை, உப்பை, இலுப்பை, திருவள்ளுவர், என்போர் உடன் பிறந்தோ ரெனவுங் கூறுவர்.

இவர்தங் கூற்றிற்குரிய ஆதாரங்கள் சங்க நூல்களில் யாண்டுங் காணக்கிடையா. உடன் பிறந்தோரறுவரில் இருவராகக் கூறப்படும் கபிலரும் அதியமானுமேஔவையார் காலத்தில் விளங்கியவர்களாகச் சங்க நூல்களால் அறியக்கிடக்கிறது. கபிலர் திருவாதவூரில் அந்தணகுலத்தில் பிறந்தவர். இதனை

“..................காதல் கூர்பனுவல்
பாடும் கபிலனார் பிறந்த மூதூர்....
வேத நாயகன் வாழும் வியன்றிருவாதவூரால்” என்பதாலும், “அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே” “யானே பரிசிலன் மன்னும் அந்தணன்” எனும் அவரது கூற்றுக்களாலும் “புலனழுக்கற்ற அந்தணாளன்” எனும் நப்பசலையார் கூற்றாலும், “வேறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலர்” எனும் பொருந்திலிளங் கீரனார் கூற்றாலும் அறிந்து கொள்ளலாம். அதியமான் கடையெழு வள்ளல்களில் ஒருவனும், சிறந்த வீரனும், சேரர் உறவினனும், ஔவையாரால் புகழ்ந்து பாடப் பெற்றவனுமாவான். வள்ளுவரும் ஔவையாரதிளமைக் காலத்தில் முதியவராயிருந்தவர். இவர் வள்ளுவ

குடியிற் பிறந்தவர். இஃதிவரது பெயரானன்றி "தேவை மறந்தும் வள்ளுவன் என்பானோர் பேதை" எனும் மாமூலர் கூற்றானும் பெறப்படும்.

வள்ளி, முறுவை, இவுப்பை என்ற பெயர்கள் சங்கநூல்களில் எவ்விடத்திலேனுங் காணக்கிடையாதவை.

ஆகவே தொன்னூற் சான்றுகொண்டு இடத்தானுங் குலத்தானும் மிக வேற்றுமை உடையராக அறியப்படும் கபிலர் அதியமான் திருவள்ளுவர் என்போரையும் பண்டைத் தமிழ் நூல்களால் அறியப்படாத மற்றைய மூவரையும் ஔவையாருடன் பிறந்தோராகக்கொண்டு பெற்றோர் யாளிதத்தனெனவும் ஆதப் புலைச்சியெனவும் ஆதி யெனவும் பகவனெனவும் ஒன்றற்கொன்று ஒவ்வாது பலதிறப்படக் கூறும் வரலாறுகளனைத்தையும் புனைந்துரைகள் எனக் கொள்ளலே ஏற்புடையது.

இவர் சேரநாட்டின் ஒரு பகுதியாகிய அதியமான் நாட்டில் பாணர் மரபில் பிறந்தவரென்பதே சங்க நூல்களால் ஒருவாறு தெரியக்கிடக்கிறது.

"இழையணிப் பொலிந்த......விறலி
பொருநரு முளரோநும் அகன்றலை நாட்
[டென
வினவ லானாப் பொருபடை வேந்தே
.........................................
வளிபொரு தண்ணுமை கேட்பின்
அதுபோரென்னு மென்னையுமுளன்"

எனும் இவரது செய்யுளால் இவர் நாடு அதியமான் நாடே யென்பதும், அரசன் அதிகமானே என்பதும் பெறப்படுகின்றன. அதியமான் மீதுபாடிய செய்யுள்களால் இவர் அதியமான் நாட்டில் பன்னாள் வாழ்ந்தவர் என்பதை யறியலாம்.

"மடவரலுண் கண்வாணுதல் விறலி
பொருநருமுளரோ நும்மகன் றலை
[நாட்டு"

என வேற்று வேந்தன் தம்மை நோக்கிக் கூறுவதாகத் தாமே தம்மை விறலி என விளித்தமையானும் "காவினெங்கலனே சுருக்கினெங் கலப்பை" எனவும் "மாடஞ்சிலம்பவேன் அரிக்குரற்றடாரி யிரிய வோற்றிப்பாடி நின்ற பன்னாளன்றியும்" எனவும் இவர் கூறினமையானும், தொண்டைமானுழைத் தூது சென்றமையானும், பாணர்களைத் தம் சுற்றத்தாரெனப் பலவிடத்துக் கூறியிருக்கின்றாராதலினும், ஔவைப்பாட்டி எனும் இவரது பெயரின் பெரு வழக்கானும், இவர் செய்யுள் செய்தலினும், ஆடுதலினும் பண்ணொடு பாடுதலினும் தூது செல்லுதலினும் சிறந்து விளங்கிய பாணர் குடியிற் பிறந்தவர் என்பது தெரியப்படும்.

(தொடரும்)

## வித்தக மதிப்புரை

இலங்கை
வவுனிய விளாங்குளவாசரும்,
சைவாபிமானியுமாகிய
ஸ்ரீமாந். க. இ. சின்னப்பு
அவர்கள் வழங்கியது.

நம் இந்து தேசமாகிய தமிழ்த்தாய் நாட்டில் புதுவை மாநகரை உறைவிடமாகக் கொண்டு செந்தமிழில் திகழ்வதும் ஞான அறிவைப் புகட்டுவதுமாகிய "வித்தகம்" என்னும் பத்திரிகையை நோக்குழி, அது நம்மனோர் உஞற்றிய பன்னெடுங்கால அருந்தவப் பயனால் அஞ்ஞான இருளைப்போக்கி மெய்ஞ்ஞானத்தை நிலை நாட்டவந்து அவதரித்த ஓர் அரும் பெறன் மகவு என்று கூறுவது மிகையாகாது. இம்மகவு தன் உழைப்பினிற் சோராது பொய்ப் பிரசாரப் பத்திரிகைகளின் மிரட்டலுக்கும் அஞ்சாது உண்மையை உள்ளவாறு உரைத்து உலகமாக்கள் உய்தியடையும் மார்க்கத்தை மேலும் மேலும்போதித்து வாழ்வதாக. கல்வி கேள்விகளிற் சிறந்த இதன் ஆசிரியரும் நீடு வாழ்வாராக.

இங்ஙனம்

வவுனியா, சிலோன். 22-5-34. } "வித்தக" சந்தாதாரன், க. இ. சின்னப்பு.

குறிப்பு:—எமது "வித்தக"த்தை ஆர்வமுடன் பெற்றுப் படித்து இம்மதிப்புரையால் உண்மையைஉரைத்து அதனையும், அதன் ஆசிரியரையும் வாழ்த்திய எமது "வித்தக" சந்தாதாருள் ஒருவரும், உண்மையை நாடும் ஆற்றலும் காதலும் உடையவருமாகிய இப்பெரியாருக்கு எமது மனமார்ந்த வணக்கம் உரிமையாகற்பாலதேயாம்.

[ப—ர்.]

—o-o—



—o-o—

## அறிவிப்பு

கடிதர்களின்
அபிப்பிராயங்களுக்கு
அவர்களே பொறுப்பாளிகள்.

—o-o—



Sandhanam Printing Works, Pondicherry Le Gérant, R. Nagarattinam